


# புது நம்பிக்கை

பெறுவோம்! கொடுப்போம்!!

மலர் - 1 ஜீலை - செப்டம்பர் - 2017 இதழ் - ௩

தனி பிரதி-ரூ. 10/-



... கர்த்தரே ஆவியானவர்.
கர்த்தருடைய ஆவி எங்கேயோ
அங்கே விடுதலையுமுண்டு.
(2 கொரி. 3:17)



# தொழுநோயாளிகளின் குழந்தைகள் இல்லம்

ஆந்திர மாநிலத்தில் இந்த இல்லம் 34 குழந்தைகளுடன் செயல்பட்டு வருகிறது. இவர்களின் பெற்றோர் தொழுநோயாளிகள் ஆனபடியினால் அவர்களால் வேலை செய்து இக்குழந்தைகளின் அடிப்படை தேவைகளான உணவு மற்றும் உடை போன்றவைகளை சந்திக்க இயலவில்லை. பள்ளிச் செல்லும் நாட்களில் மட்டும் இக்குழந்தைகளுக்கு பள்ளியில் மதிய உணவு வழங்கப்படுகிறது. ஆகவே இக்குழந்தைகள் காலையிலும் இரவிலும் உணவு கிடைக்காமல் பசியால் அல்லல் படுகின்றனர். இக்குழந்தைகளின் பரிதாப நிலையைக் கண்ட இக்கிராம மிஷனெரி மற்றும் சபையார் இக்குழந்தைகளுக்கு காலையிலும் இரவிலும் தங்களால் இயன்ற அளவு உணவு சமைத்து கொடுத்து உதவுகின்றனர். இருப்பினும் இந்த ஏழை சபையால் குழந்தைகளுக்கனா உணவு தேவைகளை தினமும் சந்திக்க இயலாமல் சிரமப்படுகின்றனர். இந்த ஏழை குழந்தைகளுக்காக உதவும் இந்த சபையுடன் இணைந்து நீங்களும் உதவலாம். இக்குழந்தைகளுக்காய் உங்கள் தனி, குழு, சபை மற்றும் குடும்ப ஜெபங்களில் ஜெபிக்க அன்புடன் வேண்டுகிறோம்.

ஒரு குழந்தைக்கான மாத உணவு தேவை ரூ. 500/–

இக்குழந்தைகளை சந்திக்க மற்றும் உதவ விரும்புபவர்கள் தொடர்பு கொள்ளவேண்டிய எண்: 9443155120



## மிஷனரிகளுக்கு மருத்துவ உதவி செய்தல்



மிஷனரி பணிக்களங்களில் பணியாற்றும் பணியாளர்கள் தேவ ராஜ்யத்தின் மகிமையான பணியை செய்து வருகின்றனர். அவ்வாறு பணியாற்றும்போது மிஷனரிகள் சந்திக்கும் இன்னல்கள், இடர்பாடுகள் ஏராளம் ஏராளம். இத்தனை இடர்களுடன் சில மிஷனரிகள் உடல் ஆரோக்கியம் சார்ந்த பல்வேறு நோய் நொடிகளுக்கு ஆளாகின்றனர். அவ்வித நோய்கள் தாக்கும்போது சில மிஷனரிகள் உரிய சிகிட்சைக்கான நிதி வசதியின்றி தவித்து வருகின்றனர்.

இவ்வித இக்கட்டான வேளைகளில் மிஷனரிகளின் சிறந்த மருத்துவ சிகிட்சைக்கு புதுநம்பிக்கை மிஷன் உதவி செய்து வருகிறது. ஏழை மிஷனரிகள் மருத்துவ சிகிட்சைக்கு கருத்துடன் ஜெபிப்போம். உதவ முன்வருவோம்.

மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ள: 9442935233

Address:-
Newhope Mission
75/33, Isaac Street,
Nagercoil - 629001

# புது நம்பிக்கை

பெறுவோம்! கொடுப்போம்!!

மலர் - 1 ஜூலை - செப்டம்பர் - 2017 இதழ் - 3

## உள்ளே . . .

*1. இயக்குநர் கடிதம் ............ 1*

*2. இறை தூது ................. 2*

*3. வேத ஆய்வு ................ 6*

*4. இளைஞர் பகுதி ........... 10*

*5. மருத்துவ குறிப்பு .......... 11*

*6. பெண்கள் பகுதி ............ 12*

*7. ஜெப குறிப்பு ............... 14*

*8. வேதாகம போட்டி ......... 15*

ஆசிரியர்

S. மோசஸ் ராஜ்

ஆசிரியர் குழு

C. பால் பென்னட் சிங்

ஆ. ரவி குமார்

S. வசந்த நேசம்

முகவரி :

**புது நம்பிக்கை**

75/33, ஐசக் தெரு,

நாகர்கோவில் - 629 001

தொடர்பு எண்கள்.

7502071054

9442935233

9789183072

தனி பிரதி. 10/-

ஆண்டு சந்தா. 100/-

ஆயுள் சந்தா. 2000/-

தனி சுற்றுக்கு மட்டும்

**இயக்குநர் மடல்!**

***கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே!***

***உயிர்த்தெழுந்த இனிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் வாழ்த்துக்கள்.***

தேவாதி தேவனின் கிருபையால் கடந்த கோடை விடுமுறை நாட்களில் வேதாகம பள்ளி மாணவர்களுக்கு விடுமுறை வேதாகம வகுப்புகள் நடத்தப்பட்டன. நமது பணிக்கள சபைகளிலும் இவைகள் சிறப்பாக நடந்தேற தேவன் உதவி செய்தார். அத்துடன் வேதாகம கல்லூரி மாணவர்களும் பல்வேறு சபைகளில் சென்று விடுமுறை வேதாகம பள்ளி மூலம் இயேசுவின் அன்பை குழந்தைகளுக்கு பாடல், கதைகள் மூலம் நடத்தி காட்டினர். இதன் மூலம் தேவ நாமம் மகிமைப்பட்டது.

உயிர்த்தெழுந்த இயேசு, நாற்பது நாட்களுக்கு பின்பு பரமேறி சென்றார். பெந்தகொஸ்தே என்னும் ஐம்பதாம் நாள், எருசலேமில் பரிசுத்த ஆவியானவரின் அருளால் சபை ஆரம்பிக்கப்பட்டது. அந்நாள் முதல் இந்நாள் வரை சபையானது பல்வேறு உபத்திரவங்கள், நெருக்கடிகள், துன்பங்களிலும் சென்ற போதிலும் தளர்ந்து விடாமல் தொடர்ந்து வளர்ந்து முன்னேறிக்கொண்டிருக்கிறது. சபைக்கு எந்த துன்பம் வந்தாலும் உயிர்த்தெழுந்த கிறிஸ்து சபையோடிருந்து சபையை இந்நாள் வரை காப்பாற்றி வந்துள்ளார். இன்னமும் அப்படியே செய்வார்.

ஆகவே உயிர்த்தெழுந்த கிறிஸ்துவின் மூலம் மீட்கப்பட்ட நாம், நமது நல் நம்பிக்கையை உறுதியுடன் பற்றிக்கொள்வோம். அத்துடன் நமது நல் நம்பிக்கையை தேசத்தில் நம்பிக்கைக்காக ஏங்கும் மக்களுக்கு 'நற்கிரியைகள்' மூலம் காண்பிக்க முன்வருவோமாக.

''ஏனெனில், நற்கிரியைகளை செய்கிறதற்கு நாம் கிறிஸ்து இயேசுவுக்குள் சிருஷ்டிக்கப்பட்டு தேவனுடைய செய்கையாயிருக்கிறோம்; அவைகளில் நாம் நடக்கும்படி அவர் முன்னதாக அவைகளை ஆயத்தம் பண்ணியிருக்கிறார்'' (எபே.2:16)

நற்கிரியை செய்ய தேவ கிருபை உங்களோடிருப்பதாக!

கிறிஸ்துவின் பணியில், சகோ. ஆ. ரவி குமார்

# ஆசீர்வாதமாயிரு!

பைபிளில் அனேக ஆசீர்வதிக்கப்பட்ட மனிதர்களை பார்க்க முடியும். ஆதாம் முதற்கொண்டு ஆண்டவரால் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் அனேகர் உண்டு. ஆனால் சிலர் ஆண்டவரின் ஆசீர்வாதத்திற்கு உண்மையாக இருக்காமல் தங்கள் சந்நதிகளை தலைமுறை தலைமுறையாக சாபத்துக்கு இட்டுச் சென்றார்கள். ஆனால் பலர் தேவனுடைய ஆசீர்வாதத்தின் மேன்மைக்காக பல பாடுகளை அனுபவித்த போதும், தேவனுக்கு முன் உத்தமர்களாக வாழ்ந்து தாங்கள் ஆசீர்வதிக்கப்பட்டதுடன் நில்லாமல் பிறருக்கும் ஆசீர்வாதமாயிருந்தார்கள். தங்கள் தலைமுறைகள் ஆசீர்வதிக்கப்படவும் முன்மாதிரிகளாக இருந்தனர். அப்படிப்படட ஒர் முன்மாதிரி மனிதராக இருந்தவர் ஆபிரகாம்.

ஆபிரகாம் என்றாலே ஆசீர்வாதம் என்பதுதான் நம் மனதில் வரும். ஆகவே அவன் எப்படி ஆசீர்வதிக்கப்பட்டான், எவ்வாறு பிறருக்கு ஆசீர்வாதமாயிருந்தான் என ஆராய்வது நாமும் பிறருக்கு ஆசீர்வாதமாயிருக்க நமக்கு வழிகாட்டும்.

ஆதியாகமம் 12:1–3 வசன பகுதியில் ஆண்டவர் ஆபிரகாமை அழைத்தார். ஆசீர்வதித்தார். அந்த ஆசீர்வாதத்தை அடைந்துகொள்ளும்படி ஆபிரகாமும் ஆண்டவர் அழைப்புக்கு அப்படியே கீழ்ப்படிந்து சென்றான். ஆபிரகாமின் அழைப்பிலிருந்து இஸ்ரேல் தேச வரலாறும் அதனுடைய ஆசீர்வாதமும் ஆரம்பமானது.

இந்த வசன பகுதியில் 'ஆசீர்வாதம்' என்னும் சொல் ஐந்து முறை வந்துள்ளது. ஆயினும் இப்பகுதி ஆபிரகாமுடன் தொடர்புடைய நான்குவித ஆசீர்வாதங்களை கொண்டுள்ளது. முதலாவது ஆசீர்வாதமும் மூன்றாவது ஆசீர்வாதமும் ஆபிரகாமுக்கு கிடைத்தவை. இரண்டாவது மற்றும் நான்காவது ஆசீர்வாதம் அவன்மூலம் பிறருக்கு கிடைப்பவை.

### i) ஆபிரகாமுக்கு ஆசீர்வாதம்

"நான் உன்னைப் பெரிய ஜாதியாக்கி, உன்னை ஆசீர்வதித்து உன் பேரைப் பெருமைப்படுத்துவேன்" (ஆதி.12:2) இந்த வசனத்தில் ஆண்டவராகிய கர்த்தர் அவனை ஆசீர்வதிக்கிறார். ஆண்டவர் ஆபிரகாமை அழைத்தபோது அவனுக்கு பிள்ளைகள் இல்லை. எழுபத்து ஐந்து வயது உடையவனாக இருந்தான். அந்த நிலையில் ஆண்டவர் அவனை அழைத்தார். அழைத்தபோதே அவனை ஆசீர்வதித்தும் விட்டார். அவனுக்கு ஆண்டவர் கொடுத்த ஆசீர்வாதம் ஒரு கட்டளையையும் பல ஆசீர்வாதங்களையும் உள்ளடக்கியது. ஆண்டவர் கட்டளைக்கு கீழ்ப்படியும் போது ஆசீர்வாதங்கள் தொடர்கிறது. ஆண்டவர் அவனுக்கு கொடுத்த கட்டளை 'புறப்பட்டு போதல்' ஆகும். அவன் புறப்பட்டபோது தேவ ஆசீர்வாதங்கள் அவனை தொடர்ந்தது. ஆபிரகாமுக்கு திரளான

ஐசுவரியத்துக்கு சொந்தக்காரனாயிருந்தான். ஆயினும் அவனுக்கு பிள்ளைகள் இல்லை. பிள்ளை இல்லாத ஆபிரகாமை பார்த்து ‘‘உன்னை பெரிய ஜாதியாக்கி’’ என கூறினார். ஜாதி என்பது இங்கு இந்தியாவில் வழங்கப்படும் ஜாதி ஏற்றத்தாழ்வு முறையை குறிக்கவில்லை. ஆனால் ஜாதி என்று மொழி பெயர்க்கப்பட்டுள்ள இந்த எபிரேய பதத்துக்கு ‘‘தேசம்’’ என பொருள். ஆம்! ஆபிரகாமுக்கு சந்ததி உருவாகும்முன்னே அவனுக்கு ஒரு பெரிய தேசத்தை உருவாக்கி தருவேன் என ஆண்டவர் ஆசீர்வதித்தார். அதுபோலவே ஆண்டவர் உண்மை உள்ளவராய் இருந்து ஆபிரகாமின் சந்ததிக்கு இஸ்ரேல் என்னும் தேசத்தை உருவாக்கி கொடுத்தார். ஆண்டவர் ஆபிரகாமை செல்வத்தினாலும், புத்திர பாக்கியத்தாலும், தேசத்தை கொடுத்தும் ஆசீர்வதித்தார். அதுபோலவே ஆண்டவர் அழைப்பை ஏற்று கிறிஸ்துவை விசுவாசிப்போரை உன்னதங்களிலே தேவன் ஆசீர்வதித்துள்ளார். ‘‘அவர் கிறிஸ்துவுக்குள் உன்னதங்களிலே ஆவிக்குரிய சகல ஆசீர்வாதங்களாலும் நம்மை ஆசீர்வதித்திருக்கிறார்’’ **(எபே.1:3)**

## ii) ஆசீர்வாதமாயிருக்க கட்டளை:

‘‘நீ ஆசீர்வாதமாய் இருப்பாய்’’ ஆதியாகமம்**12:2 –**ஆம் வசனத்தில் இரண்டாம் பகுதி இது. முதல் பகுதியில் ஆண்டவர் அவனை ஆசீர்வதித்தார். இந்த இரண்டாம் பகுதியில் ஆபிரகாம் ‘‘பிறருக்கு ஆசீர்வாதமாயிருக்கும்படி’’ கட்டளை பெற்றான். இந்த வசனத்தை ஆங்கில வேதாகமத்தில் படிக்கும்போது இந்த வசன பகுதி மிக தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. (You shall be a blessing) ‘‘நீ ஆசீர்வாதமாயிருப்பாய்’’ என்பதன் சரியான விளக்கம் ‘‘நீ (பிறருக்கு) ஆசீர்வாதமாயிருப்பாய்’’ என்பதாகும். ஆம்! ஆண்டவரால் ஆசீர்வதிக்கப்பட்ட ஆபிரகாம் பிறருக்கு ஆசீர்வாதமாயிருக்க கட்டளை பெற்றான். அவ்வாறே ஆபிரகாம் அவன் வாழ்ந்த காலத்தில் பலருக்கு ஆசீர்வாதமாயிருந்தான். ஆபிரகாமுடன் வந்த லோத்து ஆசீர்வதிக்கப்பட்டான். ஆபிரகாம் வேண்டிக்கொண்டபடியால், அபிமலேக் குடும்பத்தில் குழந்தை பாக்கியத்தை கொடுத்து தேவன் ஆசீர்வதித்தார். இன்னும் பல்வேறு விதமாக ஆபிரகாம் பிறருக்கு அவன் வாழ்ந்த காலத்தில் ஆசீர்வாதமாயிருந்தான். தேவ ஆசீர்வாதத்தை பெற்ற ஆபிரகாம் பிறருக்கு ஆசீர்வாதமாயிருந்தது போல், தேவ ஆசீர்வாதத்தை பெற்ற நாம் பிறருக்கு ஆசீர்வாதமாயிருக்கிறோமா ? மிஷனரி பணிகளில் பங்கெடுப்பதன் மூலம் நாம் இந்தியாவுக்கு ஆசீர்வாதமாயிருக்க முடியுமே!

## iii) சபிக்க முடியாத ஆசீர்வாதம்

‘‘உன்னை ஆசீர்வதிக்கிறவர்களை ஆசீர்வதிப்பேன், உன்னை சபிக்கிறவனைச் சபிப்பேன்’’ **(ஆதி. 12:3)** இந்த மூன்றாவது ஆசீர்வாதம்,

ஆண்டவர் ஆபிரகாமுக்கு கொடுத்த பாதுகாப்பு ஆகும். ஆண்டவர் ஆசீர்வதித்த ஆபிரகாமை பிறர் சபிக்காமல் கர்த்தர் பாதுகாத்தார். ஆண்டவரால் ஆசீர்வதிக்கப்பட்ட ஆபிரகாம் பிறருக்கு ஆசீர்வாதமாய் இருந்தபடியால் ஆபிரகாம் மீது சாபம் வராமல் ஆண்டவர் பாதுகாத்தார். ஆபிரகாம் வாழ்ந்த காலத்தில் ஒருவனும் அவரை சபிக்க முடியவில்லை. ஆபிரகாமின் சந்ததியாகிய இஸ்ரேல் தேசத்தையும் இந்த வாக்குத்தத்தத்தின் அடிப்படையிலேயே இன்றும் காத்து வருகிறார்.

### iv) உலகத்துக்கு ஆசீர்வாம்

''பூமியிலுள்ள வம்சங்களெல்லாம் உனக்குள் ஆசீர்வதிக்கப்படும் என்றார்'' (ஆதி. 12:3) ஆண்டவர் ஆபிரகாமை ஆசீர்வதித்தார். அவனை பிறருக்கு ஆசீர்வாதமாயிருக்க கட்டளையிட்டார். பிறரின் சாபத்திலிருந்து ஆபிரகாமை பாதுகாப்பதாக வாக்களித்தார். அத்துடன் நில்லாமல் ஆபிரகாம் மூலம் முழு உலகமும் ஆசீர்வதிக்கப்படும் என கூறினார். இந்த வசனம் நிறைவேறும்படியாகவே ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து ஆபிரகாமின் சந்ததியில் பிறந்தார் (மத். 1:1) இதையே அப்போஸ்தலர் பவுல் ''அந்த சந்ததி கிறிஸ்துவே'' என கூறினார். (கலா. 3:16) ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து மூலமாய் உலகை தேவன் ஆசீர்வதிக்கிறார்.

கிறிஸ்து மூலமாய் உன்னதங்களிலே ஆசீர்வதிக்கப்பட்ட நாம், ஆபிரகாமைப் போல் பிறருக்கு ஆசீர்வாதமாயிருக்கிறோமா ?

-H.R.K

---



சீயோன் பாறை தென்னிந்திய திருச்சபையில் சகோ. மோசஸ்ராஜ் அவர்கள் படக்காட்சி மூலம் செய்தியளித்தார்



மத்திய பிரதேசம் மாநிலத்தில் நமது சகோதரர் பெபின் அவர்கள் செய்தி கொடுத்த கூட்டத்தில் கலந்துகொண்ட மக்களில் ஒரு பகுதியினர்



# மிஷனரி அறிமுகம்

பணிக்களம் : செகந்தராபாத்,

மாநிலம் : தெலுங்கானா

மிஷனெரி : தீமோத்தி ஜித்தூரி

சகோ. தீமோத்தி ஜித்தூரி தெலுங்கானா மாநிலத்தில் செகந்தராபாத்துக்கு அருகிலுள்ள ஒரு மிஷனெரி பணிக்களத்தில் கடந்த இருபது வருடங்களாக பணி செய்து வருகிறார். மிஷனெரி பயிற்சி பெற்று மிகவும் சிறப்பாக இறைபணி செய்து வருகிறார். இவருக்கு மனைவி மற்றும் இரு பிள்ளைகள் உள்ளனர். இவரது சபை ஒரு வாடகை கட்டிடத்தில் செயல்பட்டு வருகிறது. இவருக்கு மாதாந்திர உதவி தேவைப்படுகிறது. இவருக்காக ஜெபித்து உதவுவோம்.

மிஷனெரியின் மாத உதவி ரூ.3000/– சந்திக்கப்பட தவறாமல் ஜெபிப்போம்.

---

# முன்னேற்ற பணியாளர்கள் தேவை

மிஷன் பணிக்களங்களில் பணியாற்றும் மிஷனரிகளுக்கு **புதுநம்பிக்கை** மிஷன் பல்வேறு வகைகளில் உதவி செய்து வருகிறது. மிஷனரிகளுக்கு உதவி செய்யும் மிஷனரி பணியில் ஆர்வமுள்ள தன்னார்வ முன்னேற்ற பணியாளர்கள் தேவை. தாங்கள் வாழ்ந்து வரும் பகுதியிலேயே இப்பணிகளை செய்யலாம். மிஷனரி பணியில் ஆர்வமுள்ள கிறிஸ்தவ சகோதரர் / சகோதரிகள் இப்பணிகளை ஜெபத்துடன் செய்யலாம். (நேரில் வர விரும்புவோர் முன் நேரம் குறித்து வரவும்)


எமது அலுவலக முகவரி:

**புது நம்பிக்கை மிஷன்**

75/33, ஐசக் தெரு, நாகர்கோவில் - 629 001.

தொடர்பு எண் : 9442935233


---

### பிழைதிருத்தம்

கடந்த இதழ் (ஏப்ரல்–ஜூன் 2017) பக்கம் 13–ல் வெளியான மண்ணிலிருந்து மனிதன் படைக்கப்பட்டானா ? என்ற பகுதியில் எண் 57–ல் நைட்ரஜன்–7 கிலோ என பதிவானதை **ஹைட்ரஜன் – 7 கிலோ** என வாசிக்கவும்

–ஆசிரியர்

# இயேசு கிறிஸ்துவின் மூன்று அலுவல்கள்

பிதா, குமாரன், பரிசுத்த ஆவியானவராகிய திரியேக தேவனுக்கு ,இன்றும் என்றும் உள்ள சதாகாலங்களிலும் மகிமையும் மாட்சிமையும் உண்டாவதாக. வாசகர்களை இந்த இதழின் மூலமாக மீண்டும் சந்திப்பதில் பேரானந்தம் அடைகிறேன். நாம் கடந்த இதழிலே தேவன், இயேசு கிறிஸ்து மூலமாய் நம்மை மீட்டுக் கொண்ட விதத்தைப் பற்றி பார்த்தோம். இந்த இதழில் இயேசு கிறிஸ்து மூன்று காலங்களில் நிறைவேற்றும் மூன்று அலுவல்களைக் குறித்து விரிவாக பார்ப்போம்.

தேவன் ஒருவரே (உபா.6:4) அவர் பிதா, குமாரன், பரிசுத்த ஆவியானவர் என்கிற மூன்று நபர்களாக செயலாற்றுகிறார். (மத். 18:19). இதிலே இரண்டவாது நபராகிய குமாரன் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாக இயேசு கிறிஸ்து என்ற பெயரிலே நம்மை மீட்க இந்த உலகத்தில் வெளிப்பட்ட போது, தன் தெய்வீக தன்மையோடு மனுஷீக தன்மையையும் தன்னோடு இணைத்துக் கொண்டார். (1தீமோ. 3:16) அதிலிருந்து அவர் தேவனும் மனிதனுமாக இருக்கிறார் (கொலோ. 2:9) என்றென்றும் அப்படியே இருப்பார் (எபி. 13:8) இதிலே, அவருடைய தெய்வீக நிலையிலே அவர் பிதாவுக்கும் பரிசுத்த ஆவியானவருக்கும் தனது தன்மைகளில், கிரியைகளில் சமமானவராக காணப்படுகிறார் (பிலி.2:6) அவரது மனுஷீகத்திலே பிதாவினாலே மேசியாவாக அபிஷேகிக்கப்பட்டு நமக்காக ஊழியங்களையும் அலுவல்களையும் தனது முதலாவது வருகை முதற்கொண்டு செயலாற்றி வருகிறார். அதிலே இயேசுகிறிஸ்துவின் மூன்று அலுவல்ள் தீர்க்கதரிசி, ஆசாரியர், இராஜா என்பவையாகும்.

பைபிளின் பழைய ஏற்பாட்டிலே மேசியாவாய் வரக்கூடியவர் மூன்று அலுவல்களை செயல்படுத்துவார் என முன்னடையாளமாய் கூறப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| தீர்க்கதரிசி | – | உபாகமம் 18:14–22 |
| ஆசாரியர் | – | சங்கீதம் 110:1–4 |
| இராஜா | – | சங்கீதம் 2 |

இயேசு கிறிஸ்துவின் மனுஷீகத்தில் இந்த மூன்று அலுவல்களும் ஒருங்கே காணப்படுகிறது. ஆனால் இந்த மூன்று அலுவல்களும் ஒரே நேரத்திலே முழுமையாய் நிறைவேறாமல் மூன்று காலங்களிலே நிறைவேற்றப்பட்டு அங்கீகரிக்கப்படும் எனப் பார்க்கிறோம்.

**01. தீர்க்கதரிசி:–**

பைபிளிலே தீர்க்கதரிசி என்பவர் தேவனை வெளிப்படுத்துகிறவராகவும் தேவனுக்காய் பேசுகிறவராகவும் ஜனகங்கள் அறிய வேண்டிய சத்தியங்களை தேவனிடத்திலிருந்து பெற்றுக் கொடுக்கிறவராய் இருக்கிறார். பைபிளின் தீர்க்கதரிசிகள் இதையே செய்தனர். இயேசு கிறிஸ்துவும் இந்த உலகிலே இருந்த போது இவைகளை செய்தார் என்று நாம் அறிய முடிகிறது. (லூக். 22:42; மத்.11:27; யோ. 8:28; 12:49)

மோசே, வரக்கூடிய மேசியாவானவர் விஷேசித்த தனித்துவம் வாய்ந்த தீர்க்கதரிசியாகவும் இருப்பார் என்று உபா. 18:14–22ல் குறிப்பிட்டுள்ளார். உபா. 18:15ல் வரக்கூடியவர் இஸ்ரவேல் ஜனத்தாரிடமிருந்து எழும்புவார் எனவும் எல்லாரும் அவருக்கு செவிகொடுக்க வேண்டும் எனவும் கூறினார். ஆனபடியால் வேறு எந்த இனத்தினரும் இதை தங்களுக்கு உரிமை கொண்டாடலாகாது அப்போஸ்தலனாகிய பேதுரு அப். 3:12–26 வரையுமுள்ள தனது பிரசங்கத்திலே மோசேயினுடைய இந்த தீர்க்கதரிசனத்தை காண்பித்து அது இயேசு கிறிஸ்துவின் உலக நாட்களில் அது அவரிலே எவ்வாறு நிறைவேறிற்று என தெளிவாக விளக்குகிறார்.

பைபிளில், இயேசு கிறிஸ்து தன்னை தீர்க்கதரிசியாக மத்.13:57, மாற்கு 6:4, லுக், 13:33ல் குறிப்பிட்டுள்ளார். அப்போஸ்தலர்கள் அதை அப்.2:22ல் உறுதிப்படுத்தினர். இவற்றிலிருந்து இயேசுகிறிஸ்துவின் முதலாவது அலுவலாகிய தீர்க்கதரிசியானது இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாக அவரது உலக ஊழியத்திலே நிறைவேறி அங்கீகரிக்கப்பட்டு விட்டது.

சிலர் இவைகளை வைத்துக் கெண்டு இயேசு தேவனல்ல, தீர்க்கதரிசி மட்டுமே என தவறாய் கருதுகின்றனர். ஆனால் ‘‘தீர்க்கதரிசியானது’’ இயேசு தனது மனுஷீகத்தில் நிறைவேற்றின ஒரு அலுவல் மாத்திரமே. மட்டுமல்ல மற்ற எல்லா தீர்க்கதரிசிகளை விட இயேசு தன்னிகரற்ற தீர்க்கதரிசியாய் இருந்தார். ஏனென்றால் அவர்கள் எல்லாரும் தேவனிடத்திலிருந்து வார்த்தையயைப் பெற்று பேசினார்கள். ஆனால் இயேசுவோ வார்த்தையானவராக (Logos) வார்த்தையின் வெளிப்பாடாக இருக்கிறார் (யோ.1:1–8). மட்டுமல்ல, இயேசு எங்குமே ‘‘கர்த்தர் சொல்லுகிறதாவது’’ என்று தீர்க்கதரிசிகள் கூறினதைப்போல் கூறாமல் ‘‘ஆனால், நான் உங்களுக்கு சொல்லுகிறேன்’’ (மத்.5:22,28,30) எனக் கூறுவதை கவனிக்க வேண்டும்.

## 02. ஆசாரியர்:–

பைபிளிலே ஆசாரியர்கள் ஜனங்களின் பாவபரிகாரத்திற்காக தேவனுக்கு மிருகங்களையும் படையல்களையும் பலியாக செலுத்தினார்கள். மட்டுமல்ல, ஆசாரியர்கள் தேவனுடைய சித்தத்தை தெரியப் படுத்துகிறவர்களாகவும் தேவனிடத்தில் பரிந்து பேசுகிறவர்களாகவும் ஆசீர்வாதத்தை கூறுகிறவர்களாகவும் பலிமுறைகளை தெரிவிக்கிறவர்களாகவும் காணப்பட்டார்கள், ஆசாரியர்கள் மானுட வர்க்கத்தின் பிரதிநிதியாக தேவனுக்கு முன்பாக நின்றார்கள். ஆனால் இந்த ஆசாரியர்கள் பெலவீனமானவர்களும் தாங்கள் இரட்சிக்கப்படுவதற்கே பலிகளை சார்ந்திருக்க வேண்டிய நிலையில் இருந்தார்கள். பலிகளும் மீண்டும் மீண்டும் செலுத்தப்பட வேண்டியிருந்தது.

பைபிளில் காணப்பட்ட ஆசாரிய முறைமைகள் இயேசு கிறிஸ்துவின் இரண்டாம் அலுவலாகிய ஆசாரியத்துவத்திற்கு முன்னடையாளமாய் காணப்பட்டது. ஆசாரியத்துவ ஊழியத்திலே பலியும், பலி செலுத்தும் ஆசாரியனுமே பிரதானமானவை ஆகும். இயேசு கிறிஸ்துவே நமது பிரதான ஆசாரியரும் அதே நேரத்தில் தம்மையே பலியுமாக அர்பணித்தார். (எபே.5:2, எபி.9:26–27, 10:12). இதன் மூலமாக நமது பாவங்களை கழுவி சுத்திகரித்தார். (1 யோவா. 1:7) இதிலே நம்மை மீட்பதற்கு தம்மையே ஒரே பலியாக சிலுவையிலே தம்மை தாமே அர்பணித்தார். இதோடு பழைய ஏற்பாட்டு ஆரோனிய ஆசாரியத்துவமும் பலிமுறைகளும் முடிவுக்கு வந்தன. இது வரலாற்றிலே ஒரே முறை நடந்த நிகழ்வு. இது மீண்டும் மீண்டும் நடக்க வேண்டியதில்லை. ஆனபடியினாலே இயேசுவின் பலியானது ஒரு தொடர் அலுவல் அல்ல.

ஆரோனிய ஆசாரிய ஊழியத்தின் முடிவிற்கு பின்பு புதியதொரு ஆசாரிய முறைமை உண்டானது. அதுவே மெல்கிசிதேக்கின் ஆசாரிய முறைமை ஆகும். இந்த ஆசாரியத்துவத்தில் இயேசு கிறிஸ்து மாத்திரமே நித்திய ஆசாரியராக இருக்கிறார். (எபி. 6:20, எபி.9:11)

இயேசு கிறிஸ்துவின் இரண்டாவது அலுவலாகிய மெல்கிசிதேக்கின் முறைமையின்படியான பிரதான ஆசாரியத்துவம் எப்போது துவங்கினது என்பதை நாம் கவனிக்க வேண்டும். சங்.110:1–4 மற்றும் மாற்கு 16:19ன் படி இயேசு கிறிஸ்து பிதாவின் வலது பாரிசத்தில் பரமேறியபின் உட்கார்ந்தார் என்று பைபிள் கூறுகிறது. அப்படியானால் இயேசு கிறிஸ்துவின் பரமேறுதல் முதல் இன்றளவும் பரலோகத்திலே அவரது ஆசாரித்துவ அலுவல் நிறைவேறி வருகிறது.

பரலோகத்திலே இயேசு பிரதான ஆசாரியராக நமக்காக தொடர்ந்து பரிந்து பேசுகிறார். (ரோ.8:34, எபி.7:25, எபி. 9:24) ஏனென்றால் நாம் பெலவீனமானவர்களாக காணப்படுகிறோம். யோ.17:9, 17:20ன் படி விசுவாசிகளுக்காக மட்டுமே அவர் பரிந்து பேசுகிறார். முதலாவது, நாம் சோதிக்கப்படும்போது பரிந்து பேசுகிறார். (எபி.4:14–16) இரண்டாவது, நாம் பாவம் செய்யும்போது பரிந்துபேசுகிறார். (1 யோ. 2:1) மூன்றாவது, நாம் பரிசுத்தமாய் வாழும்படி பரிந்து பேசுகிறார். (எபி.10:21–22)

## 03. இராஜா:–

இராஜா என்பவர் ஒரு கூட்ட ஜனங்கள் மீது ஆட்சி செய்து அதிகாரம் செலுத்துகிறவராவார். இயேசுவின் மனித பிறப்பிலே யூதருடைய ராஜாவாக பிறந்தார். இதை சாஸ்திரிகள் அங்கீகரித்தனர். (மத்.2:2) மத்தேயு 21:45ல் அவரது ராஜரீக அலுவல் பறைசாற்றப்பட்டது. மத். 27:11ல் பிலாத்துவுக்கு முன்பாக தன்னையே யூதருடைய இராஜா என்று முழக்கமிட்டார்.

பாபிலோனிய அடிமைத்தனத்தோடு யூதருக்கு இருந்த ராஜாக்களின் அளுகை முடிவுக்கு வந்தது. ஆனால் தாவீதின் வம்சாவழியில் வரக்கூடிய மேசியா யூதருக்கு நிரந்தரமான ராஜாவாக அங்கீகரிக்கப்பட்டு ஏற்றுக்கொள்ளப்படுவார்; மட்டுமல்ல அதோடு அவரே உலகம் முழுமைக்கும் சதாகாலமும் இராஜாவாயிருப்பார் என முன்னறிவிக்கப்பட்டது. (ஏசாயா 11) அதோடு இராஜாவாயிருப்பவர் தெய்வீகமானவராயிருப்பார் என்றும் கூறப்படுள்ளது. (சங். 110)

குமாரனாகிய கர்த்தர் இயேசு என்கிற பெயரிலே தாவீதின் வழியிலே (மத்.1:1) ராஜாவாக இஸ்ரவேலில் வந்தார். ராஜியத்தின் சுவிசேஷத்தை பிரசங்கித்தார். பரலோக ராஜ்ஜியம் அருகில் வந்துவிட்டது என கூறினார். (மத்.4:17) ஆனால் யூதர்கள் இயேசுவை ராஜாவாக ஏற்றுக்கொள்ளாமல் அவரை புறக்கணித்தார்கள். (யோ.1:11, 19:15) ஆனபடியினாலே யூதரிடத்தில் ராஜ்ஜியம் ஸ்தாபிக்கிற திட்டம் ஒத்திவைக்கப்பட்டு இடைப்பட்ட நாட்களில் சபை என்கிற தேவனுடைய புதிய கூட்டம் ஏற்படுத்தப்பட்டு செயல்பட்டு வருகிறது. இப்போது பரலோகத்தில் அவருடைய ராஜரீகம் அங்கீகரிக்கப்பட்டுள்ளது. இந்த ராஜ்ஜியம் இயேசு கிறிஸ்துவின் இரண்டாம் வருகையின்போது பூமியிலே ஸ்தாபிக்கப்படும், என்றும் அது முதற்கொண்டு அவர் சதாகாலங்களிலும் ராஜாவாயிருப்பார் என்றும் பைபிள் சொல்லுகிறது. (வெளி 17:16) இந்த ராஜ்ஜியம் வரும்படிக்கு நாம் ஜெபிப்பதற்கும் எதிர்பார்க்கும்படிக்கும் இயேசுகிறிஸ்து கட்டளையிட்டுள்ளார். (மத்.6:10) இயேசு கிறிஸ்து மீண்டும் ராஜாவாக வரும்போது நாமும் அவரோடு சேர்ந்து ஆளுகை செய்ய இருக்கிறோம்.

தற்போது தீர்க்கதரிசி அலுவல் மூலமாய் பரிந்து பேசிக்கொண்டிருக்கிற இயேசு கிறிஸ்து ராஜாதி ராஜாவாய் மீண்டும் வந்து ராஜாவின் அலுவலை நிறைவேற்றப் போகிறார். மாரநாதா.



– S. மோசஸ் ரீஜ்

# ஊட்டச்சத்து

ஒரு மனிதனுக்கு உண்மையான தன்னம்பிக்கை வளரவேண்டும் எனில் அவனுக்கு ‘இறைநம்பிக்கை’ வேண்டும். அதாவது ‘விசுவாசம்’ வேண்டும் என கூறினேன். ஞாபகமிருக்கிறதா தம்பி! நல்லது. மறக்காமல் இருந்ததற்காக உனக்கு என் பாராட்டுக்கள்.

அத்தோடு மனிதனுக்கு தன்னம்பிக்கை தரும் விசுவசம் வளர சரியான ஊட்டச்சத்து வேண்டும் எனவும் கூறினேன். அதையும் மறக்காமல் நீ ஞாபகப்படுத்தியது மகிழ்ச்சி.

சரி! இனி அந்த ஊட்டச்சத்து என்ன ? என்ற உன் கேள்விக்கு பதிலளிக்கலாம் என நினைக்கிறேன். மனிதன் திடகாத்திரம் உள்ளவனாக வளர அவனது உடலுக்கு பலவிதமான ஊட்டச்சத்துக்கள் தேவை. இரும்பு சத்து, கால்சியம், தாமிரம் போன்ற பல தாது சத்துக்களும் உயிர் சத்துக்களான பல்வேறு விட்டமின்களும் உடலுக்கு தேவை. அப்போதுதான் மனித உடல் வலுவானதாக நோயற்றதாக இருக்கும். அதுபோலவே மரம், செடி, கொடிகள் வளரவும் அவைகளுக்கு ஊட்டச்சத்துக்கள் தேவை. மரங்கள் தங்களுக்கு தேவையான ஊட்டச்சத்துக்களை மண்ணிலிருந்து தங்கள் வேர் மூலம் உறிஞ்சி எடுத்துக் கொள்கின்றன.

அதுபோலவே நமக்கு விசுவாசம் வளர ஊட்டச்சத்துதேவை. அந்த ஊட்டச்சதது ‘‘தேவ கிருபை’’ மட்டுமே. நமது விசுவாசம் வளரவும், தன்னம்பிக்கை பலப்படவும், நமக்கு தேவை ‘‘கிருபை.’’ இதனை எபேசியர் 2:8 மிக அழகாக கூறுகிறது. கிருபையினாலே விசுவாசத்தைக்கொண்டு இரட்சிக்கப்பட்டீர்கள். இது உங்களால் உண்டானதல்ல, இது தேவனுடைய ஈவு.

இரட்சிப்பு மட்டுமல்ல, நமக்குள் செயல்படும் விசுவாசமும் தேவனுடைய ஈவு ஆகும். தேவனுடைய கிருபை மூலம் இவைகளை நாம் பெறுகிறோம். இரட்சிப்பையும், விசுவாசத்தையும் பெறுவது மட்டுமல்ல, இவைகள் வளர உதவி செய்வதும் கிருபையே!

கிருபை என்றால் என்ன ? அதுதானே இப்போது நீ கேட்டது. அதற்கும் பதில் சொல்லிவிடுகிறேன். கிருபை எனில் எளிய தமிழில் அருள் என கூறுவர், ஆயினும் வேதாகம கருத்து ‘‘தகுதியில்லாதவரை தகுதிப்படுத்துதல்’’ என பொருள் கொள்வதே.

உடலாலும், உள்ளத்தாலும் சோர்ந்து இருப்போரை உற்சாகமூட்டி, தகுதிப்படுத்தி, முழு மூச்சுடன் செயல்பட வைப்பதே கிருபை. தகுதியற்ற, ஆடு மேய்த்த தாவீதை இஸ்ரவேலின் ராஜாவாக உயர்த்தியது கிருபையே! சோர்ந்திருக்கும் உனக்கும் இப்போது தேவை கிருபை மட்டுமே! அதுவே உனக்கு தன்னம்பிக்கை தர உதவும் விசுவாசம் வளர தேவையான ஊட்டச்சத்து.

இந்த ஊட்டச்சத்து இயேசுகிறிஸ்துவின் மூலம் மட்டுமே கிடைக்கும் ஒரு அரிய சக்தி! கிருபையும் சத்தியமும் இயேசு கிறிஸ்துவின் மூலமாய் உண்டாயின. (யோ. 1:17) அவருடைய பரிபூரணத்தினால் நாம் எல்லாரும் கிருபையின்மேல் கிருபை பெற்றோம்'' (யோ.1:16)

உன் தன்னம்பிகை வளர உன்னை தகுதிப்படுத்தும் கிருபை என்னும் ஊட்டச்சத்தை தினமும் பருகு. அவர் கிருபை என்றுமுள்ளது (சங்.136:1)

சரி அண்ணே! கிருபை இயேசு கிறிஸ்துவில் மட்டுமே கிடைக்கும் என்றீர்கள். அதை தினமும் பருக வேண்டும் என்கிறீர்கள் தினமும் எப்படி பருகுவது!

நன்றாக கேட்டாய் சொல்கிறேன்! (தொடரும்)

- எச்.ஆர்.கே

---

## மருத்துவ குறிப்பு – ஆப்பிள்



இந்தியாவில் காஷ்மீர் பகுதியில் ஆப்பிள் அதிகமாக விளைகிறது. ஆப்பிள் பழத்தில் பல வகைகள் உண்டு. ஆப்பிள் பழத்தில் நீர்சத்து அதிகம் உள்ளது. தினமும் ஒரு ஆப்பிள் சாப்பிட்டால் கண்ணுக்கு நல்லது. கண்ணொளி சிறப்பாக இருக்கும். அத்துடன் ஆப்பிளில் உள்ள நார்சத்துக்கள் உடலில் கெட்ட கொழுப்புகள் சேர்வதை தடுத்து இதய நோய் வராமல் தடுக்கும். ஆப்பிள் பழம் உடல் எடை குறைய உதவும். ரத்தத்தில் தேவையற்ற சர்க்கரை சேராமல் கட்டுப்படுத்தும் ஃப்ளவனாய்ட்ஸ் (Flavonoids) , இதில் உள்ளது

---

### நன்கொடை அனுப்புவோர் கவனத்திற்கு

நன்கொடை மற்றும் காணிக்கை அனுப்புவோரும், வங்கியில் காணிக்கை செலுத்துவோரும் தயவு செய்து தங்கள் பெயர் மற்றும் முழு முகவரியை எமக்கு தெரிவிக்கவும். உரிய ரசீது கொடுக்க அது உதவிகரமாக அமையும். தங்கள் உதவிக்கும் ஒத்துழைப்புக்கும் நன்றி.

**பெயர் :** Newhope Mission (நியூஹோப் மிஷன்)
**எமது வங்கி கணக்கு எண் : 254901000557777**
**வங்கி : இந்தியன் ஓவர்சீஸ் வங்கி** (IOB)
**கிளை : மிடாலக்காடு** (Midalakkadu)
IFSC Code : IOBA 000 2549

நமது மிஷன் பணிக்களங்களை நேரில் பார்வையிட்டு ஜெபிக்க உங்களை அன்புடன் அழைக்கிறோம்.
தொடர்பு எண் : **9443155120** & **9442935233**

# முதல் ஐரோப்பிய கிறிஸ்தவர்
# லீதியாள்

பவுல் அப்போஸ்தலர் புறஜாதிகளுக்கு மற்றும் இராஜாக்களுக்கும் சுவிசேடகனாக கர்த்தரால் தெரிந்து கொள்ளப்பட்டவராயிருந்தார். (அப். 9:15) பவுலின் இரண்டாவது நற்செய்தி பயணத்தின்போது அவர்கள் (பவுல், சீலா, தீமோத்தேயு) ஆசியாவிலே வசனத்தைச் சொல்லாதபடிக்கு பரிசுத்த ஆவியினாலே தடைபண்ணப்பட்டு (அப்.16:16) அதன் அடுத்த படியாக மக்கேதோனியா நாட்டிற்குப் போக ஏவப்பட்டார்கள் (அப்.16:9,10)

மக்கேதொனியா நாடு ஐரோப்பா கண்டத்தைச் சார்ந்ததென்று நாம்அறிவோம். கிரேக்க தேசம் (Greece) இதனுள் அடங்கியதாகும். யூதர்களில் பலர் அந்நாட்களில் கிரேக்க தேசத்தில் பரவியிருந்தார்கள். இவர்கள் Jewish Diaspore என்று அழைக்கப்பட்டார்கள். (Jewish Diaspore நம் இந்திய நாட்டிலும் கூட உண்டு). அங்குள்ள பிலிப்பி என்கிற பட்டணத்திற்குத்தான் பவுல் குழுமத்தினர் வந்து சேர்ந்தனர். இங்கேதான் தியத்தீரா ஊராளான, இரத்தாம்பரம் விற்கிற லீதியாள் என்கிற பெண்மணி நற்செய்தியைக் கேட்கும்படி ஏவப்பட்டார் (அப். 16:14). இந்த வசனத்தில்அவர் தேவனை வணங்குகிற ஒரு ஸ்திரீ என்று எழுதப்பட்டிருக்கிறது. இதிலிருந்து அவள் மெய்யான கடவுளை அறிந்தவர் என்பதாக கொள்ளலாம். மேலும், பவுல் சொல்லியவைகளைக் கவனமாகக் கேட்கும்படி கர்த்தர் அவள் இருதயத்தைத் திறந்தருளினார் என்றும் உள்ளது. ஆகையால் கர்த்தர் கிருபையுள்ள தம்முடைய வசனத்தை லீதியாளும் அவளோடு கூடின மற்றப் பெண்களும் கேட்கும்படி ஆயத்தம் பண்ணியிருந்தார்.

பிலிப்பி பட்டணத்தில் சுவிசேடம் அறிவிக்கப்பட்டபோது அதை முதலில் பெற்றுக் கொண்டவர்கள் லீதியாளும் அவள் குடும்பத்தினரும் என்று சொல்லப்பட்டுள்ளது. அந்த பட்டணத்தில் மேலும் அநேகரும் இரட்சிப்பின் நற்செய்தியைக் கேட்டபோது அதை ஏற்றுக் கொண்டார்கள் எனவும் காண்கிறோம். சுவிசேடத்திற்கு அவர்கள் தங்களைத் திறந்தளிக்க கர்த்தரின் ஆவியானவரே கிரியை செய்தார் எனவும் நாம் அறிந்து கொள்ளலாம். நற்செய்தி பணிக்குழுவினர் அந்தப் பட்டணத்தை விட்டுப் புறப்பட்டபோது, அவர்கள் லீதியாளையும் மற்ற விசுவாசிகளையும் சந்தித்து, அவர்களோடு ஜெபித்து ஆலோசனை சொல்லிப் போனார்கள் (அப். 16:40). லீதியாளும் குடும்பத்தினரும் ஐரோப்பா கண்டத்தின் முதற் பலனானவர்கள் என்று நாம் காண்கிறோம்.

அந்தப் பட்டணத்தைவிட்டு, பவுலின் குழுமத்தினர் ஐரோப்பாவின் பிற பட்டணங்களில் சுற்றித்திரிந்தார்கள். அத்தேனே, தெசலோனிக்கே, கொரிந்து, பெரோயா போன்ற பட்டணங்களிலுள்ள ஐரோப்பிய விசுவாசிகளில் அத்தேனே பட்டணத்சைச் சேர்ந்த தாமரி என்னும் பெயருள்ள ஒரு பெண்ணும் தியோனிசியு என்ற மார்ஸ் மேடை நியாயாதிபதிகளில் ஒருவனும் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள் (அப். 17:34). அத்தேனே என்பது Athen என்ற கிரேக்க தேசத்தின் தலைநகராகும். அத்தேனே பட்டணத்தில்தான் சந்தைவெளிகளில் எதிர்ப்பட்டவர்களோடு உரையாடினார்கள் என்றும், எப்பிக்கூர், ஸ்தோயிக்கருமான ஞானிகள் சிலரும் பவுலுடன் வாக்குவாதம் பண்ணினார்கள் எனவும் வாசிக்கிறோம். (கிரேக்க தேசம் தத்துவ மேதைகளுக்கு பெயர்பெற்றதாகும். philosophers). இந்தப் பட்டணத்தில்தான் மார்ஸ்மேடை—அறியப்படாத தேவனுக்கு என்று எழுதப்பட்டிருந்த பலிபீடம் முதலானவைகளோடு தொடர்பு கொண்டுள்ள சம்பவம் நடைபெற்றது. கொரிந்து பட்டணத்தில்தான் பவுல் ஆக்கில்லா—பிரிஸ்கில்லா தம்பதியரை சந்தித்து அவர்களோடு இணைந்து செயல்பட்டார். கொரிந்து பட்டணத்தில் ஓய்வுநாள் தோறும் ஜெப ஆலயத்தில் சந்தித்து யூதருக்கும் கிரேக்கருக்கும் புத்தி சொன்னார்கள் என்றுள்ளது. (அப். 18:4).

மேற்கண்ட எல்லாப்பட்டணங்களிலும் யூதரும், கிரேக்கரில் பலரும் மனோவாஞ்சையால் வசனத்தை ஏற்றுக்கொண்டார்கள். வேத வாக்கியங்களை ஆராய்ந்து பார்த்தார்கள் என்றும் அறிகிறோம். வசனத்தை விசுவாசித்தவர்களில் கனம் பொருந்திய ஸ்திரீகள் அநேகர் இருந்தார்கள். அப். 17:4) என்றும் காண்கிறோம். நற்செய்திக் குழுவினர் மக்களை சந்தித்து கொண்ட இடங்கள் பெரும்பாலும் யூதருடைய ஜெப ஆலயங்கள் என்றே சொல்லலாம். அத்தேனே, தெசலோனிக்கே, கொரிந்து முதலிய பட்டணங்களில் பிலிப்பி பட்டணத்தில் ஜெப ஆலயம் காணப்படவில்லை எனத் தெரிகிறது. ஆகவேதான் அவர்கள் ஆற்றின் அருகே உட்கார்ந்து, அங்கே கூடிவந்த ஸ்திரீகளுக்கு உபதேசித்தார்கள் என்று காண்கிறோம். (அப். 16:13)

லீதியாள் என்னும் விசுவாசி பவுலையும் கூட்டத்தாரையும் தனது வீட்டிலே ஏற்றுக்கொண்டு உபசரித்தாள் என்றும் வாசிக்கிறோம். (அப். 16:15). இவர் பவுலின் ஊழியத்திற்கு ஒத்தாசையாய் செயல்பட்டு தன் வீட்டாரோடு ஞானஸ்நானமும் பெற்றுக் கொண்டாள் என்றுள்ளது. இந்த விசுவாச வீரர் புதிய ஏற்பாட்டின் பெண்களின் மத்தியில் சிறந்து விளங்கினார். கர்த்தர் தமது கிருபைகளையும் உண்மைகளையும் இந்த பெண்மணியின் மூலமாக அதிசய பிரகாரமாக விளங்கப்பண்ணினதை நினைவுகூர்ந்து நாமும் கர்த்தருடைய அன்பிலும் உண்மையிலும் பெருகுவோமாக!

— ராணி S. மார்ட்டின்

“இடைவிடாமல் ஜெபம் பண்ணுங்கள் ....” (1 தெச.5:17)

# ஜெப விண்ணப்ப குறிப்புகள்

☞ சத்தீஸ்கர் மாநிலத்தில் கட்டப்பட்டு வரும் சபை கட்டிட பணிகளின் தேவைகள் சந்திக்கப்பட ஜெபிப்போம்.

☞ சகோ. ரமேஷ்–ஷர்மிளா குடும்பத்திற்கு கர்த்தர் ஆண் குழந்தை பாக்கியத்தை அருளும்படி ஜெபிப்போம்.

☞ பணி செய்த இடத்தில் காலில் காயம் ஏற்பட்டு அறுவை சிகிட்சை செய்து கொண்ட சகோ. ராஜேஸ் அவர்களின் பரிபூரண சுகத்திற்காக ஜெபிப்போம்.

☞ சகோதரி டெய்சி அவர்களின் புற்று நோய் சுகமாக கர்த்தர் உதவும்படி ஜெபிப்போம்.

☞ நம் நாட்டின் புதிய ஜனாதிபதியானவருக்கு தேவன் பாதுகாப்பையும், ஞானத்தையும் அருளும்படி ஜெபிப்போம்.

☞ சகோ. ரூபின், கிறிஸ்துபுரம் அவர்கள் வெளிநாட்டு பணிக்கு செல்ல தடைகள் நீங்க ஜெபிப்போம்.

☞ சகோதரர் செல்வகுமார் அவர்கள் குடும்பத்தில் குழந்தை பாக்கியத்தை கர்த்தர் அருளும்படியாக ஜெபிப்போம்.

☞ கிருஷ்ணகிரி மாவட்டத்தில் சகோ. மீகா அவர்கள் பணிக்களத்தில் கட்டப்பட்டு வரும் சபையின் தேவைகள் சந்திக்கப்பட்டு சபை கட்டி முடிக்கப்பட உள்ள தடைகள் நீங்க ஜெபிப்போம்.





## ஜெப மற்றும் குடும்ப ஆலோசனை

கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே!

உங்கள் ஜெப தேவைகள் மற்றும் குடும்பம், வேதாகமம் குறித்த ஆலோசனைகளுக்கு எங்களை தொடர்பு கொள்ளவும். ஜெபித்து ஆலோசனை கூறி உதவ ஆயத்தமாயிருக்கிறோம்.

**தொடர்பு எண் : 9442935233**

# வேதாகம வினா – விடை போட்டி

வேதாகம பகுதி : **– எசேக்கியேல்**

1. தண்ணீரை அளக்கும் அளவையின் பெயர் என்ன ?
2. தம்மூசுக்காக ஸ்திரீகள் என்ன செய்தார்கள் ?
3. சாஸ்திரம் பார்ப்பதுமில்லை என்று எந்த அதிகாரத்தில் உள்ளது ?
4. தங்கள் ஆத்துமாவை தப்புவிக்கிற புருஷர்கள் யார் ?
5. பழமொழி என்ற சொல் எந்த அதிகாரத்தில் கூறப்பட்டுள்ளது ?
6. எப்படி பெருமூச்சு விட வேண்டும் ?
7. வேதத்திற்கு அநியாயஞ் செய்தவர்கள் ?
8 தண்டு வலிக்கிறவர்கள் யார் ?
9. நியாயந்தீர்ப்பேன் என்று யாரைப் பார்த்து கூறப்பட்டுள்ளது ?
10. யோசேப்புக்கு கொடுக்கப்பட்ட எல்லையின் பங்கு எத்தனை ?

**விடைகளை அனுப்ப வேண்டிய முகவரி**
**S. Vasantha Nesam**
23- Eastaff Street, Nagercoil - 629 001
Cell : 9789183072

விடைகள் வந்துசேர வேண்டிய கடைசி நாள் : **செப்டம்பர் 30, 2017**

## பணிக்கள சந்திப்பு

நமது மிஷனெரி பணிக்களங்களில் நடைபெறும் பணிகளை நேரடியாக பார்வையிட்டு அங்கு பணிபுரியும் மிஷன் பணியாளர்கள் மற்றும் அவர்கள் குடும்பத்தினரை சந்திக்கவும் விருப்பமுடையவர்களாய் இருக்கிறீர்களா ? அப்படியானால் உங்கள் விருப்பத்திற்கு உ றுதுணையாக நாங்கள் இருக்கின்றோம். நமது குழுவினர் வடஇந்திய மிஷனெரி பணிகளை பார்வையிட செல்லும்போது நீங்களும் எங்களுடன் இணைந்து கொள்ளலாம். உங்கள் வருகை வட இந்தியாவில் உள்ள புதிய கிறிஸ்தவ நண்பர்கள் யாவரையும் உற்சாகப்படுத்துவதாக அமையும். பணிக்களங்களை நேரில் சந்திக்க விரும்புவோர் தொடர்பு கொள்ளவும்.

**குறிப்பு:**

ஆயுள்சந்தா ரூ.2000/– செலுத்துபவர்களுக்கு புது நம்பிக்கை வெளியீடுகள் அனைத்தும் இலவசமாக அனுப்பித் தரப்படும்.

# அஞ்சல் வழி வேதாகம பயிற்சி

**வேதாகம கல்லூரி படிப்பு மையங்கள் :**

நாகர்கோவில், மார்த்தாண்டம், இரணியல், திருநெல்வேலி, கருங்கல், ஈரோடு, திருப்பூர், திருவண்ணாமலை, பஞ்சாப்.

இறையியல் மற்றும் வேதாகமத்தை முறைப்படி படிக்க ஓர் அரிய வாய்ப்பு. தேவனுடைய வார்த்தை தெளிவாக கற்று தேற உதவும் வகையில் கீழ்கண்ட பயிற்சிகள் நேரடி வகுப்பு மற்றும் அஞ்சல் வழியாக வழங்கப்பட்டு வருகிறது. ஆர்வமுள்ள அனைவரும் படிக்கலாம்.

| படிப்பு | காலம் | தகுதி |
|---|---|---|
| Bachelor of Theology | 3 ஆண்டுகள் | +2 தேர்ச்சி |
| Bachelor of Bible Studies | 2 ஆண்டுகள் | தமிழ் படிக்க தெரிந்தவர்கள் |
| Master of Divinity | 2 ஆண்டுகள் | B.Th |
| Master of Ministry | 2 ஆண்டுகள் | B.B.S |
| Master of Theology | 2 ஆண்டுகள் | M.Div. |
| Diploma in Biblical Hebrew | 2 ஆண்டுகள் | தமிழ் தெரிந்தவர்கள் |



ஆர்வமுள்ள கிறிஸ்தவ ஆண் / பெண் இருபாலரும் படிக்கலாம். தமிழ் மற்றும் ஆங்கில வழியில் படிக்க வசதியுண்டு. குறைந்த கட்டணம் தரமான பயிற்சி.

மேலும் விபரங்களுக்கு:–


**Director**
**CALS - Bible Course**
Harris House,
8/69-c, Manvilagam, Reethapuram P.O.
K.K.Dist - 629 159
Cell : 9442935233

# பாடல் புத்தகம் – வெளியீடு

சபை ஆராதனை, வீட்டு ஜெபக்கூட்டம், தனி ஜெபத்தில் தேவனை பாடி துதிக்க பக்தி பரவசம், இனிமையான பாடல்களின் தொகுப்பு. 500–க்கும் மேற்பட்ட பழைய, புதிய பாடல்கள் மலையாள, ஆங்கில பாடல்களும் உண்டு. பாடல் புத்தகத்தின் விலை ரூ. 70/–



**எமது இதர வெளியீடுகள்**

**யூத பண்பாடும் வசன விளக்கமும் – ரூ. 30/–**

**சபை உடைதலை தடுக்கும் வழிகள் – ரூ. 120/–**

**சபை நிதி பெருகும் வழிகள் – ரூ. 70/–**

குறிப்பு:– அனைத்து கிறிஸ்தவ புத்தக நிலையங்களிலும் கிடைக்கும்

தொடர்பு எண்: 9442935233




## புது நம்பிக்கை வெளியீடுகள்

வேதாகமத்தின் ஆழமான சத்தியங்களை புரிந்து கொள்ள "யூத பண்பாடும் வசன விளக்கமும்" என்னும் நூல் வெளியிடப்பட்டுள்ளது. வேத வசனங்களில் வரலாற்று மற்றும் கலாச்சார பின்னணியில் வசனங்களை புரிந்து கொள்ளவும் ஆவிக்குரிய முறையில் விசுவாசிகள் வளரவும் பயனுள்ள விளக்கங்கள் இப்புத்தகத்தில் உள்ளன. அனைத்து கிறிஸ்தவர்களும் படிக்க வேண்டிய புத்தகம். வேதாகம பள்ளி மாணவர்கள் மற்றும் ஆசிரியர்களுக்கு பரிசளிக்க தகுந்த சிறந்த புத்தகம்.

குறிப்பு:– அனைத்து கிறிஸ்தவ புத்தக நிலையங்களிலும் கிடைக்கும்

தொடர்பு எண்: 9442935233

## மத்திய பிரதேச மாநில இளம் விசுவாசிகள்



மத்திய பிரதேச மாநில மிஷெனெரி பணிக்களத்தில் நடந்த எழுப்புதல் கூட்டம்.

சபை கட்டப்பட வேண்டிய மிஷனரி பணிக்களம்






Editor : S. Moses Raj, (Mobile : 7502071054),
Published by : New Hope Mission,
75/33, Isaac St. Nagercoil - 629 001.
Contact : 9442935233
e-mail: newhopebharat@gmail.com
website : www.newhopebharat.org
Printed at : Latha Press, 9791659601

For Private Circulation Only